Registered No. M. 2330.



# சித்தாந்தம்

மலர் எ | பவ ஆண்டு ஐப்பசித் திங்கள் 1934ஷ அக்டோபர்மீ | இதழ் க0

## சமாஜ விசேஷ மகாநாடு

[காரியதரிசி]

நமது சமாஜத்தின் இருபத்தொன்பதாம் ஆண்டு விசேஷ மகாநாடு ஒன்று திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவசாரிய சுவாமிகள் தலைமையில் சென்னை திருமயிலாப்பூர் சங்கீத சபை மண்டபத்தில் மிகச் சிறப்பாக நிகழும் பவஷ புரட்டாசிமீ ௨ (21-9-1934) வெள்ளிக்கிழமை முதல் மூன்றுநாட்கள் இனிது நிறைவேறிய நற்செய்தியை மிக மகிழ்ச்சியோடு தெரிவிக்கின்றோம்.

முதல்நாள் மாலை 5½ மணிக்கு தலைவரவர்களைச் சமாஜத்தினர் மேளவாத்தியம், குடை கொடிச்சீலை முதலிய கோயில் திருச்சின்னங்களாகிய பலவகை மரியாதைகளோடு கபாலீசுவரர் கிழக்கு சந்நிதியிலுள்ள மண்டபத்திலிருந்து மகாநாட்டுக்கு ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். பிறகு அன்பர்கள் அனைவரும் பேரவைக்கண் அமர்ந்தவுடன் தமிழ்மறை

ஓதப்பெற்று கடவுள் வணக்கம் நிகழ்ந்தது. பிறகு சமாஜத் தலைவர் சைவத் திருவாளர் - வேங்கடசாமி நாட்டாரவர்கள் சுவாமிகள் தமிழ்நாட்டில் சைவத்துக்கும் தமிழுக்கும் தமது மன மொழி மெய்களால் ஒல்லும்வகை உழைத்து வரும் பெற்றியினை விளக்கி அவர்கள் சென்னைக்கு விஜயம் செய்துள்ள போழ்தில் சமாஜத்தினர் வேண்டுகோளுக் கிரங்கி இம்மகாநாட்டின் தலைமை தாங்க ஒப்புக்கொண்ட அன்பினையும் வற்புறுத்தி சுவாமிகள் மகாநாட்டுத் தலைவராகும்படி பிரேரித்தார்கள். இதனை அவையினர் ஏக மனதுடன் ஒப்புக்கொண்டனர். பிறகு சுவாமிகள் தலைமைத் தானத்தில் அமர்ந்தார்கள். பிறகு நமது சமாஜப் போஷகருள் ஒருவராகிய சைவத் திருவாளர் புழலை - திருநாவுக்கரசு முதலியாரவர்கள் தாம் அன்புகூர்ந்து இயற்றிய சமாஜ நல்வரவேற்புக் கவியைப் பாடினார்கள். (இதனை மற்றோரிடத்திற் காண்க.) பிறகு ஏறக்குறைய ஒன்றரை மணி நேரம்வரையில் பல உபநிடத வாக்கியங்களையும், திருக்குறள், திருவாசகம் முதலிய பல திருவாக்குக்களையும் ஆதாரமாகக் கொண்டு சிவம், சைவம், சித்தாந்தம் என்ற சொற்களின் பொருள்களை இனிது விளக்கி, சிந்தைக்கினிய செவிக்கினிய வந்த இருவினைக்கினிய மாமருந்தே போன்ற தமது தலைமைப் பேருரையை சுவாமிகள் நிகழ்த்தினார்கள்.

பிறகு திரு. குப்புச்சாமிமுதலியாரவர்கள், 'தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்' என்பதுபற்றி தமது நிரம்பிய ஆராய்ச்சியுடன் நகைச்சுவை பொருந்த இனியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். பிறகு தலைவரவர்கள் திருக்குறள் கடவுள் வாழ்த்திலுள்ள பல பாக்களை விவரித்து, அவற்றிலுள்ள கருத்துக்கள் உபநிடதங்களில் வந்துள்ள இடங்களை விளக்கி, தேவர் குறளும் திருநான் மறை முடிவும் ஒன்றே என்பதை அனைவரும் வியக்கும் முறையில் தெளிவாக எடுத்

துக் கூறித் தமது கருத்துரையைத் தெரிவித்தார்கள். பிறகு கடவுள் வாழ்த்தோடு முதல் நாள் நிகழ்ச்சிகள் முற்றுப் பெற்றன.

அடுத்த நாள் பிற்பகல் 2½ மணிக்கு மீண்டும் பேரவை கூடுவதாயிற்று. கடவுள் வணக்கமும் தலைவர் முன்னுரையும் முடிந்தவுடன் திருவாளர்கள் இராஜேசுவரியம்மாள், அனவரத விநாயகம் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை, மீனாட்சி சுந்தரம் பிள்ளை, சுவாமிநாத சாஸ்திரிகள், சுரேந்திரநாத ஆர்யா, சச்சிதாநந்தம்பிள்ளை, ஆகிய பேரறிஞர்கள் முறையே புகலி வேந்தன் புனிதமொழி*, ஒழிவிலொடுக்கம்*, சங்க காலமும் சமயமும், அற்புதத் திருவந்தாதி, பெரிய புராணத்தில் சில அணிகள், The Message of Saivism (ஆங்கிலத்தில்) சிறுத்தொண்டர் என்னும் செம்பொருள்கள் பற்றி மிகத் தெளிவாகவும் செம்மையாகவும் அவையினர் கருத்தில் வேரூன்றிச் செல்லும் முறையில் அரிய செந்தமிழ்ச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பின்னர் தலைவரவர்கள் ஆரியத்திலும் தமிழிலும் பல மேற்கோள்களை எடுத்து விளக்கித் தமது கருத்துரையை மிக விரிவாக நிகழ்த்தினார்கள். கடவுள் வாழ்த்துடன் இரவு ஒன்பதரை மணிக்குக் கூட்டம் கலைந்தது.

மூன்றும் நாள் பிற்பகல் 2½ மணிக்கு மீண்டும் மகாநாடு கூடிற்று. கடவுள் வணக்கமும் தலைவர் முன்னுரையும் முடிந்தவுடன் திருவாளர்கள் சுவாமிநாத சிவாசாரியார், சமரபுரி முதலியார், சிதம்பரநாத முதலியார், கலியாணசுந்தர முதலியார் ஆகிய பேரறிஞர்கள் முறையே சிவதத்துவம், திருமுருகாற்றுப்படை, சமயநெறி, திருஞான சம்பந்தரும் சமணரும் என்னும் அரிய பொருள்கள் பற்றி நிரம்பிய

*இவ்விரு சொற்பொழிவுகளின் சுருக்கத்தை மற்றோரிடத்திற் காண்க.

ஆராய்ச்சியுடன் கற்ளுரும் மற்ளுரும் இன்புறும் இனிய முறையில் செந்தமிழ்ச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர்கள். பிறகு திரு. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள், சைவ மக்கள் நாடோறும் தவிராது செய்தற்குரிய பணிகள் சிலவற்றை விளக்கி சிவதீக்கை செய்து உபகரிக்குமாறு சுவாமிகளை வேண்டினுர்கள். பிறகு தலைவரவர்கட்கும், சொற்பொழி வாளர்கட்கும், தமிழ்மறை யோதிய திரு. சிங்காரவேல் முதலியாருக்கும், இடம் உதவிய சங்கீத சபையினருக்கும் வன்னியசங்கம் பாடசாலை அதிகாரிகட்கும், பலவகையிலும் தொண்டு புரிந்து மகாநாட்டைச் சிறப்பித்த ஏனைய பல அன் பர்கட்கும் காரியதரிசி வந்தனம் கூறினர். பிறகு தலைவரவர் கள் தமது முடிபுரையை மிகவிரிவாகவும் தெளிவாகவும் எளிய நடையில் அனைவரும் உணரும் வகையில் கூறினுர்கள். பின் னர் அரநாம முழக்கத்துடன் மகாநாடு இனிது நிறை வெய்தியது.

அடுத்தநாள் மாலை சுவாமிகள் திருமயிலைக் கபாலீச்சரத் தில் தரிசனம் செய்தார்கள். ஆலய அதிகாரிகள் சுவாமிகளை விருதுகள் முதலிய சகல மரியாதைகளுடன் அன்போடு வரவேற்று தரிசனம் செய்வித்தது பெரிதும் போற்றத் தக்கது. தரிசனம் முடிந்தவுடன் சுவாமிகள் வேதபாதமண்ட பத்தமர்ந்து "ஈரமிலா அங்கம் உயிர் எய்தவற்றல்" என்பது பற்றி கடன்மடைதிறந்தாலன்ன சொற்பெருக்காற்றினுர்கள். கபாலீச்சரத்தில் ஒரு தேவார பாடசாலை இருத்தல் வேண்டு மென்றும் வற்புறுத்தினுர்கள்.

அடுத்தநாள் மாலை திருவள்ளுவர் ஆலயத்தில் சுவாமிகள் தரிசனம் செய்து முடித்தவுடன் ஆங்கிருந்து விருதுகளுடன் வெள்ளீசுவரர் ஆலய அதிகாரிகளால் வரவேற்கப்பட்டார்கள். நான்கு மாடவீதிகளிலும், தென்கூர் செல்வ விநாயகர் தெரு, ஆடம்தெரு முதலிய தெருக்களிலும் ஊர்வலமாக அழைக்

கப்பட்டு, பற்பல வீடுகளில் பூர்ணகும்பம், மங்களாரத்தி முதலிய உபசாரங்கள் செய்யப்பெற்று இறுதியில் வெள்ளீசுவரர் ஆலயத்தில் தரிசனம்செய்து முடித்தார்கள். இறுதியில் சண்முகப்பிரபாவம் என்பது பற்றிய சொற்பொழிவு நடந்தது. சுவாமிகள் திருமயிலாப்பூரில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் மயிலைவாசிகட்குப் புத்துயிர் அளித்துள்ளன.

## நல்வரவேற்புக் கவி

ஆசிரியவிருத்தம்

திருவளர்பூம் பொழிலுடுத்த விருகரையும்
புரண்டோடுஞ் சீர்சான் மிக்க
பெருமிதங்கொள் வயப்பெருக்கா லுலகூட்டு
மணிவயல்சூழ் பெருமை சான்ற
மருவளர்தண் பெண்ணைநதித் தீரமமர்ந்
துயரியபல் வளமிக் கார்ந்த
அருமைதவழ் நடுநாட்டின் மிகச்சிறந்த
பெருமைதனை யறிந்தெவர்தா மறைவ ரின்றே.

மன்னுபுக ழவ்விருவ ரருள்நிறைந்த
வடியார்கள் வதிவ தாலும்
பன்னரிய பொருள்நிறைந்த தேவார
முதலியவை பகர்த லாலும்
உன்னரிய சிவயோக சிவபோகப்
பெரியார்கள் உறைத லாலும்
தன்னிகரில் திருப்பாதி ரிப்புலியூர்
மிகச்சிறந்து தழைக்கு மாதோ. (உ)

வஞ்சமணர் கற்றூணிற் கட்டியமிழ்த்
திணுங்கடலில் வாகி சர்க்கு
நஞ்சணிதற் பரன்றேன்றுத் துணையீச
ரக்கல்லே நாவா யாக்க
அஞ்சவவர் முன்னர்கரை யேறியவந்
நாவரச ரடியைப் பேணும்
மஞ்சுதவழ் மணிமாட நிறைவீதி
யலங்கார மல்கு மென்றும். (௩.)

செருக்கறுக்க வருமடியார் மலமகற்றி
யருள்புரியுந் திகழ்மெய்ஞ் ஞானப்
பெருக்கமுற வாட்கொடிருக் கோவலூ
ராதீனப் பெட்புட் கொண்ட
இருக்கைவளர் ஞானியார் மடாலயத்திற்
கதிபதியா யிரும்பூ தெய்தும்
குருக்கள்சிவ சண்முகமெய்ஞ் ஞானசிவா
சாரியரெங் கோமான் வாரீர். (௪)

பனியசல வுமைதருநற் குமரனிரு
சரணமலர் பணிந்தி றைஞ்சி
இனியதமிழ் மணங்கமழுஞ் செவிக்கினிய
சொற்பொழிவை யெளிதி னூட்டி
கனியமன முருகநித நிகழ்த்திவருந்
தேசிகநின் கவின்சேர் வாசத்
தொனியழகைக் கேட்டுமகிழ் விக்குமகோ
பந்யாசர் துய்க்க வாரீர். (௫)

மங்களமார் சுத்தாத்து விதசைவ
சித்தாந்த மகாச மாசச்
சங்கமமர் விசேடநிறை விழாவிற்குத்
தகைமைபெறுந் தலைமை பெற்றும்

எங்களையா தரிக்கமன மகிழ்வொடுவந்
துளங்குளிர வியம்ப வாரீர்
மங்கலிலாச் சிவவேடந் தாங்குபுநற்
பொலிவுடைய மகிபா! வாரீர். (சு)

வாழ்த்து வெண்பா

வாழ்க சிவசமய மாமநுநீ றக்கமணி
வாழ்க திருத்தொண்டர் மன்னுதமிழ்—வாழ்கநிதம்
நற்சிவ சண்முகமெய்ஞ் ஞானசிவா சாரியர்கள்
சொற்பா திரிப்புலியூர் சூழ்ந்து.

---

ஷ சமாஜப் போஷகரி லொருவராகிய பண்டிதரத்தினம்-துகஸ்ரீ புழலை. திருநாவுக்கரசு முதலியார் (*Mirasdar & Honorary Magistrate, Sembiam.*) இயற்றியது.

# ஐ ய வி னு

[கோவைக்கிழார்]

பரஞ்சோதி முனிவர் அருளிச்செய்த திருவிளையாடல் புராணத்தில் சமணர் கழுவேற்றிய படலத்தில் திருவேடகம் உண்டான வரலாறு அடியிற்கண்டபடி கூறப்பட்டிருக்கிறது. சமய மேம்பாட்டை நிரூபிக்க சமணரும் திருஞானசம்பந்தரும் வைகையாற்றில் ஏடுகளை இட்டனர். சமணருடைய ஏடுகள் வெள்ளத்தில் கீழே போயின. சம்பந்தருடைய ஏடு நீரை எதிர்த்து மேலே சென்றது. சமணர் தோல்வியுற்று சபதப்படி கழுவில் ஏற்றப்பட்டனர். பாண்டியன் சம்பந்தரை நோக்கி எதிரே சென்ற ஏடு எங்குற்றது என்று வினவினுன். அதைக் கொணர சம்பந்தரும் ஆற்றின் கரையிலே மேற்கே சென்றனர். சிறிது தூரம் செல்லவே ஏடு மறைந்தது. அங்கிருந்த இடைச் சிறுவர்களைக் கேட்டதற்குத் தமக்குத் தெரி

யாது என்றனர். பிள்ளையார் பெருமானைப் பதிகம் பாடினர். ஈசனர் அங்கே ஒரு வில்வக் காட்டினுள் சுயம்புவாகத் தம் உருவம் காட்டினர். பாண்டியனும் அச்செய்தி கேட்டு விரைந்து வந்தனன். உடனே ஈசனர் ஒரு முதிய அந்தணனுகத் தோன்றிச் சம்பந்தரை விளித்து திருநீறுவழங்கினர். பிள்ளையாரும் ஏடு கேட்க அதனைத் தந்து மறைந்தருளினர். அதனைப் பாண்டியனுக்குக் காட்டப் பாண்டியனும் பிள்ளையாரை வணங்கி அங்குதோன்றிய சுயம்புமூர்த்திக்குத்திருக்கோயில் எழுப்பி ஊரும் கட்டினன். அதுமுதல் அவ்வூருக்குத் திருவேடகம் எனப் பெயர் ஏற்பட்டது.

"அற்றைநா ளாதி யாக வேடக மென்று நாமம்
பெற்றதால்"

என்றுர் பரஞ்சோதியார். (செ - 74) இதே காரணந்தான் வேம்பத்துராரும் கூறுகின்றனர். (செய் - 65, 66 கழுவேற்றின படலம்)

ஆனல் சேக்கிழாரோ இவ்வரலாற்றை வேறுவிதமாகக் கூறுகின்றுர். சம்பந்தப்பெருமான் இட்ட ஏடு நீரை எதிர்த்துச் சென்றது; குலச்சிறையார் ஒரு விரைவாய் ஓடும் குதிரைமேல் ஏறிப் பின்தொடர்ந்தார்; சம்பந்தர் அவ்வேடு தங்கும்படி ஈசனுரை "வன்னி" என்ற பதிகம் பாடினுர்; உடனே குலச்சிறையார் நீர் நடுவுள் புக்கு ஏட்டை எடுத்துத் தன் தலைமேல் வைத்துக்கொண்டு வந்து சம்பந்தப்பெருமானுக்குக் காட்டினுர்; மன்னவன் மந்திரியை அழைத்து சமணரை முறைப்படி தண்டிக்கச் சொன்னுன். இவ்வரலாற்றிற்கும் பரஞ்சோதியார் கூறும் வரலாற்றிற்கும் உள்ள வேற்றுமைகளை மிகத் தெளிவாய் அறியலாம். சேக்கிழார் வரலாற்றில் ஏடகம் என்ற பெயர் ஏற்பட்டதன் காரணம் ஏடு தங்கினதினுல் என்று கூறப்படவில்லை.

"ஏற்றுயர் கொடியினானைப் பாடினார் ஏடு தங்க" (சே - 849)

என்றும்,

"ஏடகம் பிள்ளை யார்தாம் வன்னிஎன் றெடுத்துப் பாடக்
கூடிய நீரில் ஏடு குலச்சிறை யாரும் கூடி
காடிட மாக ஆடும் கண்ணுதல் கோயில் மாடு
நீடுநீர் நடுவுட் புக்கு நின்றஏ டெடுத்துக் கொண்டார்"
(சே - 850)

என்று மாத்திரம் கூறுகின்றார் சேக்கிழார்.

ஆனால், சம்பந்தப் பெருமான் ஏடு தங்கப்பாடிய திருவேடகப் பதிகத்தில் அடியிற்கண்ட பாசுரங்கள் இருக்கின்றன.

"வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னிய றிருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட வடியவர்
இன்னிசை பாடலர் ஏடகத் தொருவனே"

"புதுமலர் கொண்டு மறையவர் வழிபடும்படியானவரும் அடியார்கள் இன்னிசைப் பாடலால் துதிக்கப்படுபவருமான ஏடகத்தில் எழுந்தருளும் ஒருவன்" என்பது பொருளாகும். ஆகவே ஏடகம் என்ற பெயர் கொண்ட தலம் சம்பந்தர் அங்கு செல்வதற்கு முந்தியே இருந்திருக்கவேண்டும்.

"கோடுசந் தனமகில் கொண்டிழி வையைநீர்
ஏடுசென் றணைதரு மேடகத் தொருவனை
நாடுதென் புகலியுண் ஞானசம் பந்தன
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே"—11.

இதனால் 'ஏடகத் தொருவனை ஏடுசென் றணைந்தது என்கிறார். ஆகவே, ஏடகக்கோயில் முந்தியே இருத்தல் வேண்டும். ஏடு சென்றதினால் "ஏடு + அகம்" என்றாகி ஏடகம் ஆகி இருக்குமானால் ஞானசம்பந்தர் பாடினதற்கு முந்தி அப்பெயர் ஏற்பட நியாயம் இல்லை. ஆகவே, அப்பெயரும் அப்பெயர் கொண்ட கோயிலும் ஞானசம்பந்தர் ஏடுவிட்டதற்கு முந்தியே இருத்தல் வேண்டும் எனப் புலப்படும்.

இவ்விரு கொள்கைகளில் எது சரியானது ? ஏடகம் எப்போது ஏற்பட்டது என்பவைதான் ஐயங்கள்.

# ஒழிவிலொடுக்கம்*

[எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம். ஏ., எல். டி.]

பண்டைக்காலந்தொட்டு நமது இந்தியா தேசத்துக்குச் சிறப்பாக வுள்ளது தத்துவ ஆராய்ச்சியே. 'இந்தியா தேசத்தார் தத்துவ சாஸ்திரிகள் சமூகம்' என்று புகழ்ந்துரைத்தாருமுண்டு. தத்துவமென்பது உண்மை. பொய்யே நிறைந்த உலகத்தில் மெய்யைக் காண்பதற்காகவே இந்தியா தேசத்தார் பாடுபட்டனர். உண்மையை எல்லாரும் ஒரேவிதமாகக் கண்டாரல்லர். அதனாலேயே பலவகை மதங்கள் ஏற்பட்டன.

தமிழ்நாட்டில் உண்மையாராய்ச்சி புரிபவர் வேதாந்திகளென்றும் சித்தாந்திகளென்றும் இருவகைப்படுவர். வேதாந்தமாகிய உபநிடதங்களிற் காணும் கொள்கைகளைத் தமவாக் கொள்பவர் வேதாந்திகள். வேதாந்தங் கூறுவது அத்வைதமென்று கொண்டு கேவலாத்வைதம் விசிஷ்டாத்வைதம் சுத்தாத்வைதமெனு மூன்றுக்கும் அதனை யாதாரமாகக் கொள்வர். துவைதத்துக்கும் வேதாந்தம் இடங்கொடுக்கு மென்பாரும் உண்டு. இஃதிவ்வாறாயினும் தமிழ்நாட்டில் வேதாந்தமென்னின் சங்கராத்வைதமே குறிக்கப்படும். கைவல்ய நவநீதம், ஞானவாசிட்டம் முதலிய நூல்கள் அதனை விரித்துரைப்பன.

சித்தாந்திகள் வேதங்களோடு சிவாகமங்களையும் தமக்கு ஆதாரமாகக் கொள்வர். சித்தாந்தம் ஆகமாந்தமெனவும் படும். சிவாகமங்கள் சைவமென்றும் சொல்லப்படுதலால் சித்தாந்தத்தைச் சைவசித்தாந்தமென்று சாதாரணமாகச் சொல்லுவதுண்டு. சித்தாந்தமென்னுஞ் சொற்குப் பொருள்

---

*இது திரு. பிள்ளையவர்கள் நமது சமாஜவிசேஷ மகாநாட்டில் நிகழ்த்திய சொற்பொழிவின் குறிப்பு.

முடிந்த முடிவு. அதனுல் சைவசித்தாந்தமென்பதே பொருத்தமான பெயராகும். சைவசித்தாந்தத்தை யுரைக்கும் நூல்கள் சிவஞானபோதம் முதலிய பதினுன்கெனச் சொல்வர். சிவஞானபோதம் மெய்கண்ட தேவராற் செய்யப்பட்டதாகலின் அவற்றை மெய்கண்ட சாத்திரங்களென்றும் சொல்வர். அவற்றுள், சிவஞானபோதம் முதனூல், சிவஞான சித்தியார் வழிநூல், சிவப்பிரகாசம் சார்புநூல். மற்றையவை இவற்றிற் கூறப்படும் உண்மைகளுள் ஒரோவொன்றை யெடுத்துத் தெளிவுபடுத்துவன. சிவஞானசித்தியார் பரபக்ஷமும், சங்கற்பநிராகரணமும் புறச்சமய அகச்சமயங்களைக் கண்டிப்பன. திருவுந்தியாரும் அதன் வழித்தாகிய திருக்களிற்றுப்படியாரும் அனுபூதியைப் பெரிதும் பாராட்டி யுரைக்கும் அரிய சாத்திரங்களாம். அவை சிவஞானபோதத்திற்கு முன் தோன்றியவை யெனக் கொண்டு அவற்றை ஆதியில் வைப்பர்.

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று.

என்பது மெய்கண்ட நூல்களின் பெயர்களைக் குறிக்கும் வெண்பா. மெய்கண்ட சாத்திரங்களை மூலபாடமாகவும் உரைபாடமாகவும் வெளியிட்டவர்கள் இம் முறையையே கொண்டனர். உமாபதிசிவம் இயற்றிய நூல்கள் சிவப்பிரகாசாதி எட்டு என்னும் கொள்கையே பரவியுள்ளது. 'சிவப்பிரகாசாதி யஷ்டக'மென்றோர் பதிப்பு அவற்றுள் இவற்றைமாத்திரம் கொண்டு வெளிவந்ததுண்டு. ஆயினும், உண்மை நெறிவிளக்கம் அவர் செய்ததன்று, சீகாழிச் சிற்றம்பலநாடிகள் சீடர் சீகாழித் தத்துவனுர் செய்தது. அதனை யொழித்துச் சீகாழிச் சிற்றம்பலநாடிகள் இயற்றிய துகளறு

போதத்தைச் சேர்த்துச் சாத்திரங்களைப் பதினன்கெனத் தொகைப்படுத்தற்கு ஆதாரங்கள் உண்டு. திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், துகளறுபோதம் மூன்றையும் பதினன்கில் இறுதி மூன்ருக வைத்துச் சாத்திரங்களைக் கிரமஞ்செய்த சுவடிகள் காணக் கிடைக்கின்றன.

சிவஞானபோதத்திற்கு முன் சிவாகமச் சார்பாகத் தமிழிற் செய்யப்பட்ட நூல்கள் ஞானமிர்தம் போன்றவை சில உள. ஞானமிர்தத்தில் ஞானபாதமே அச்சிடப்பட்டுளது. சரியாபாதம் கிரியாபாதம் யோகபாதம் மூன்றும் அகப்பட்டில. கிரியாபாதத்துள்ள செய்யுளொன்று சிவஞானபாடியத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது.

சாஸ்திரங்களின் நோக்கமென்ன? சாஸ்திர ஆராய்ச்சி செய்வது எதன்பொருட்டு? சாஸ்திரங்கள் பக்குவிகளுக்கு உண்மையை யுணர்த்துவதற்காக ஏற்பட்டன. சாஸ்திர ஆராய்ச்சி செய்வது மெய்யுணர்ந்து பற்றற்று முத்தியடைதற்பொருட்டு. இதன்பொருட்டுச் சாஸ்திர ஆராய்ச்சி செய்வோர் எத்தனை பேர் உளர்? சைவசித்தாந்த சாஸ்திரங்களை எடுத்துக்கொண்டு நோக்குவோமாயின், அவற்றின் ஆராய்ச்சி எவ்வாறு நடைபெறுகிறது, எதன் பொருட்டு நடைபெறுகிறது? சிறிதுகாண் முன்வரை, அச் சாஸ்திரங்கள் அச்சுக்கு வராதிருந்தபொழுது, திருவாவடுதுறை முதலிய மடங்களிலுள்ளாரும் மடங்கட்குப் புறத்தே தமிழ்ப்புலமை நிரம்பியாரும் உரிய தீக்ஷைகளைப்பெற்று, கல்வியறிவு ஒழுக்கங்களான் நிரம்பிய குரவரிடத்து அவற்றை யோதிப் பொருள் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து சிவன்முத்தரா யிருந்து வந்தனர். இதற்கு மாருகச் சில இடங்களில் சில காலங்களில் வாதங்கள் நிகழ்த்துவதற்கு அவை கருவியா யிருந்ததுமுண்டு. தற்காலத்திலோ முறை மாறி வாதங்கள் நிகழ்த்துவதற்கே

அவை கருவியாயின. இச் சாஸ்திரங்களை ஆராய்பவர் இதர சமயங்களை யாராயாமலே அவற்றைக் கண்டிக்கத் தெரிந்து கொண்டனர். சாஸ்திரங்கள் எழுதிய காலத்தில் வழங்கிய சமயங்கள் இக்காலத்து வழக்கொழிந்தனவாயினும் அவற்றை யாராய்வது தருக்கநூற் பயிற்சி தருமென்று கொண்டு அதில் திளைக்கின்றனர். ஆகவே சாஸ்திரங்கள் செய்தாரின் நோக்கம் அடியோடு மறக்கப்பட்டொழிந்தது.

சிவஞானபோதம் முதலிய சாஸ்திரங்கள் சிவாகமங்களின் ஞானபாதத்தையே முன் மாதிரியாகக் கொண்டு பதி பசு பாச விலக்கண முணர்த்துங்கால் ஐயந்திரிபற வுணர்த்துதல்வேண்டிச் சைவசித்தாந்த மொழிந்த பிறமதக் கொள்கைகளைப் பூர்வபக்ஷஞ்செய்து அதனுடைய உயர்வை ஆங்காங்கே புலப்படுத்தின. மூலங்களிற் குறிப்பாக வுள்ளனவற்றை உரைகள் தெளிவாக விளக்கிப் போந்தன. எனினும் சாஸ்திரங்களின் நோக்கம் பிற மதங்களைப் பூர்வபக்ஷஞ் செய்தலன்று. ஒரூரை நாடிச் செல்பவன் வழியிற் கண்ட காட்சிகளால் தன் நாட்டம் மறந்து அவற்றைக் கண்டு மகிழ்ந்து காலம் போக்கல்போ லாகும் சாஸ்திரங்களில் சாரத்தைக் கைக்கொள்ளாது சாரமல்லாதவற்றில் மனத்தைச் செலுத்துகை.

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் போன்ற நூல்கள் கற்போரது மனத்தை உண்மைப் பொருளில் மாத்திரமே செலுத்தும். திருவுந்தியார்க்கு விளக்கவுரை போன்றது திருக்களிற்றுப்படியார். துகளறுபோதம் சிவோபாசனையால் அடையப்பெறும் அநுபூதித் திறங்களை வகுத்துரைப்பது. இவற்றோடு துணைபோவதாயும் இவற்றிலுள்ள பொருள்களை உவமைகளால் தெளிவுபடுத்தி விரித்துரைப்பதாயுமுள்ள நூல் ஒழிவிலொடுக்கம்.

பல விஷயங்களைக் கலந்து கூறும் மற்றச் சாஸ்திரங்கள் போலன்றிச் சுகாதித நிலையை விரைவி லடைவிக்கும் தற்போத வொழிவைப் பற்றியே யுரைக்கும் இந் நூல் பெரு வழக்காயில்லாமை வருந்தத் தக்கது. சைவசித்தாந்திக ளெனத் தம்மைச் சொல்லிக்கொண்டு திருப்தியடைவோரிற் சிலர் இது ஐக்கியவாத முரைக்கும் நூல் என்றுரைத்து இதனை ஒதுக்குவதை நான் அறிவேன். ஐக்கிய வாதத்திற் குரைக்கப்படும் இலக்கணங்கள் இந்நூலகத் தில்லாமையை ஆராய்ச்சியாளர் அறிவர். தற்போத மழிவதால் தம் உலக வாழ்விற்குக் கேடுவருமென் றஞ்சி இந் நூலை யோதி யுணர் தலையொழிந்தனர் என்னின் அது பொருந்துவதாகும். ஒழிவி லொடுக்கத்தைச் சிரத்தையோடு ஓதியுணர்பவர் உலக வாழ்வில் அசிரத்தை கொள்ளுதல் திண்ணம். அசிரத்தை வெறுப் பினால் வருவதன்று; தற்போத மொழிந்து சிவானந்தப் பேற்றை யடையும் நெறியில் நிற்பவர்க்கு அவ்வசிரத்தை தானே யுண்டாகும். சாந்தலிங்க தேவர் வைராக்கியசத கத்தை அரங்கேற்றிய காலத்து அதனைக் கேட்ட பிரபுக்கள் பலர் அப்பொழுதே துறவடைந்தன ரென்னும் வரலாறு உண்டன்றோ.

இனி, இவ்வரிய சாத்திரம் இயற்றிய ஆசிரியர் யாவர், அவர் திகழ்ந்த காலம் எது முதலிய கேள்விகள் பல எழு தல் இயல்பே; இந் நூலைக் கி. பி. 1851-ல் முதலாக அச்சிடு வித்துத் தமிழுலகிற் பரவச்செய்தவர் திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க சுவாமிகள். அவர் இதற் குச் சிறப்புப் பாயிரமாகிய 'வள்ளல் குருராயன்' என்னும் வெண்பாவிற்கு ஓர் விரிந்த விருத்தியுரை யியற்றி நூலோடு சேர்த்ததன்றியும் அருமபதங்களையும் அருந்தொடர்களையும் ஆங்காங்கே விளக்கினர். பின் இந் நூல் இரண்டு மூன்று முறை பதிப்பிக்கப் பட்டது. கி. பி. 1906-ல் இடையில் விட்

டுப்போன சிறப்புப் பாயிர விருத்தியைச் சேர்த்ததோடு உரையில் பந்திகளைப் பிரித்து வேண்டாத சந்திகளை விடுத்து ஒரு பதிப்பு என்னால் வெளியிடப்பட்டது. அதன் பின் தோன்றிய பிறர் பதிப்புக்கள் என்னுடைய முகவுரையை மாத்திர மொழித்து மற்றையவற்றை அதிலுள்ளபடியே வெளியிட்டன. இராசாங்கத்தார் கையெழுத்து நூல் நிலயத்தில் இரண்டு ஏட்டுச் சுவடிகள் உள்ளன. அவற்றிற்கும் அச்சுப்பிரதிகட்கும் சில பேதமுண்டு. அவற்றின் துணைகொண்டும் பிற விடங்களில் அகப்படும் சுவடிகளின் துணைகொண்டும் அந் நூல் நன்றாக ஆராய்ச்சி செய்து நவீன முறையிற் பதிப்பித்தற் குரியது.

திருவருட்பிரகாசவள்ளலார்க்கு முன் இந்நூலைத் தமிழுலகிற் பரவச்செய்தவர் பேரைச் சாந்தலிங்கதேவர் என்னும் வீரசைவப் பெரியார். குமாரதேவர் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகளைத் தம் குரவராகிய சாந்தலிங்கதேவரிடத்துக் கொண்டு சென்று அவரை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டிய பொழுது சுவாமிகளது தமிழ்ப்புலமையை அறிந்த சாந்தலிங்கதேவர் ஒழிவிலொடுக்கத்தையும், தாம் இயற்றிய கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத வுந்தியார் என்னும் நூல்களையும் அவர் கையிற் கொடுத்து அவற்றிற்கு உரையெழுதுமாறு ஆஞ்ஞாபித்தார். ஞானசாஸ்திரங்களுக்கு உரையெழுதுவதில் சிதம்பரசுவாமிகள் சிறந்தவர் என்பதனை அவர் உரைகளை மேனோக்காக வோதியவர்களும் உணர்வர். அவர் உரையின்றி ஒழிவிலொடுக்கத்தின் பொருள் தெளிவாக விளங்காதென்பது மூலத்தைமட்டுமோதி நோக்கியோரால் எளிதினறிந்து கொள்ளப்படும். அந் நூலி லுள்ள உவமை நயங்களையும் சாஸ்திர நுட்பங்களையும் சிதம்பர சுவாமிகள் நன்கு விளக்கியுள்ளார்.

இனி, இந் நூலைத் தமிழுலகிற் குபகரித்த பெரியார் சீகாழிக் கண்ணுடைய வள்ளலார். அவர் திருஞானசம்பந்தப் பெருமான் திருவவதாரஞ் செய்த பதியிலே அவதரித்து, ஞானக்கண்ணுடைமையாலும் அருட்கண்ணுடைமையாலும் கண்ணுடையார் என்னும் பெயர்க்கும், ஞானத்தின் மிக்க கொடையில்லையாகலின் அதனை வரைவின்றி வழங்கியதனுல் வள்ளல் என்னும் பெயர்க்கும், உரியரானுர். அவர் வரலாற்றைச் சீகாழி வித்துவச்சிகாமணி ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளையவர்கள் செந்தமிழ்ச்செல்வியில் விரிவாக எழுதியுள்ளார்கள். 'அதிகைக்கதிபர்கள் மரபினருள் சண்பையர் தலைவனென்பாரும் மங்கையர்க்கரசி யென்பாரும் செய்த தவப்பயனுல் கண்ணுடைய வள்ளலார் இரௌத்திரிஸு பங்குனிமீ திருவாதிரைத் திருநாளில் (1380-1) திருவவதாரஞ் செய்து 96 திருநட்சத்திரத்திலும் பூவுலகத்தை வைதிக சமயத்தால் அலங்கரித்து நளவருஷம் (1476) சித்திரைமீ சித்திரைத்திருநாளில் சோதியிற் பரிபூரணமடைந்தார்.'

கண்ணுடைய வள்ளலார் அருளிச்செய்த நூல்களுளொன்ருய மாயாப்ரலாபத்திற்குச் சிறப்புப்பாயிர முரைத்தவர்

செடிலப் புனல்சூ ழதிகைக் கதிபன்
ஆழிமேன் மிதந்த காழிமூ தூரன்
திசைமிகு கீர்த்திக் குகமடத் தலைவன்
கருநெறி கழிக்குந் திருநெறித் தேசிகன்
அத்தனைக் காட்டி யழுத வாழ்வித்த
வித்தகன் றனக்கு வேளைக் காரன்
சிற்குணன் றன்னைச் சேர்ந்தவர்க் கருளும்
நற்கண் ணுடைத்திரு ஞானசம் பந்தன்
திருமலி யின்பச் சிவனடித் தொண்டர்தம்
பெருமைய ரடிபுனை பெற்றி யோனே

என உரைத்ததனுல் வள்ளலார் சீகாழியினராகிய அதிகைக் கதிபராதலோடு குகமடத் தலைவரென்பதும், திருஞானசம்

பந்தப் பெருமானுக்கு அகம்படித் தொண்ட ரென்பதும், கண்ணுடைத் திருஞானசம்பந்தனென ஆண்டான் பெயரையும் சேர்த்து அவர் பெயரை வழங்குதலுண்டென்பதும் அறியக்கிடக்கும். குகமடம் அதிகையதிபர்களால் வைதிக சைவத்தை நிலைநாட்டற்பொருட்டு ஏற்படுத்தப்பட்டதென்றும், அது ஆதியில் குணதரவீச்சரத்திற்குக் கீழ்பாலிருந்ததென்றும், 1380-ல் அதிகைக்கதிபர்கள் அதனைச் சீகாழியில் ஆனந்த தீர்த்தத்தின் கீழ்பால் ஸ்தாபித்துக் கிரீடாசாரியர்களாலே சகல விமரிசைகளுடன் சத்காலக்ஷேபஞ் செய்துவந்தனரென்றும், வள்ளலார் இம் மண்டலத்தில் தமது காலத்தே 96 சைவமடங்களைத் தாபித்துத் தாம் அவைகட்குத் தலைவராகவும் ஏனை மடபதிகள் இதர தத்துவபதிகளாகவும் விளங்கச் செய்தார் என்றும் பிள்ளையவர்கள் உரைத்தனர். சோழமண்டல சதகத்திற் காணும்,

பள்ள மலியார் கலியுலகிற் பரம னுருவாய்ப் பணிந்தோருக்
குள்ள படியீ தெனவுணர்த்தி யுலவா முத்தி யுறக்காட்டிக்
கள்ள மதவல் லிருள்கடிந்து காணுங் காழிக் கண்ணுடைய
வள்ளல் கருணை செயுஞ்சூழல் வளஞ்சேர் சோழ மண்டலமே

என்னுஞ் செய்யுள் வள்ளலார் கண்ணுடையார் எனப்பட்டதற்குக் காரணத்தை யுரைத்து அவரவதாரத்தால் சோழநாடு உய்ந்ததைக் குறித்தது.

கி. பி. 1906-ல் வெளிவந்த என்னுடைய ஒழிவிலொடுக்கப் பதிப்பு முகவுரையில் கண்ணுடைய வள்ளலாரைப்பற்றி வழங்கும் ஐதிகங்கள் மூன்று உண்டு என உரைத்தேன். 1929-ல் வெளிவந்த அருட்பிரகாசம் என்னும் தமிழ்மாசிக பத்திரிகையின் இரண்டிதழ்களிற் காணப்படும் கண்ணுடைய வள்ளலார் வரலாற்றிலும் இம் மூன்றுமே காட்டப்பட்டுள்ளன. அவற்றையின்றி வேறு ஐதிகம் எங்கும் உரைக்கப்படவில்லையாகலின், அவற்றையிங்கு யான் முன்னுரைத்தவாறே

யுரைப்பேன்.ஓர் ஐதிகம் இவரைச் சைவசித்தாந்த ஸ்தாபனு சாரியராகிய மெய்கண்டதேவர்க்குத் தநயராக்கும். அப்பெரியார்க்குப் பிள்ளையா யவதரித்த வள்ளலார் மேலான ஞான நெறியிலேயே மனம் பற்றினவராய்ச் சரியை கிரியை யோகமென்னும் மூன்று பாதங்களையும் பழித்து, நூலெங்கும் தற்போதவொடுக்கம் வேண்டற்பாலதென முழக்கி, அதனைத் தவிர வேறொன்றுங் கூருததற்கு அறிகுறியாக (தற்போத) ஒழிவிலொடுக்கமெனத் தமது நூற்குப் பெயரு மிட்டருளி அதனைத் தந் தந்தையாரிடத்துக் கொண்டுபோய் அவர் பூஜை வேளையிற் காட்டினராம். மெய்கண்டதேவரோ பக்குவ வேறுபாடுகளுக் கேற்ப வழங்கிவரும் வழிபாட்டு வேறுபாடுகளையும் ஆதரித்துவந்தன ராதலின், அந் நூலைக் கண்டு மனமுளைந்து பூஜையிலிருந்தவாறே சிறுகோப வெளிப்பாட்டினுல் தமது திருமேனியி லிட்டிருந்த விபூதி திரிபுண்டராக் குறிகளை யழித்துச் சைவசமயத்துக்கும் அச் சமயத்தின் சின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்களுக்கும் கேடு வந்ததே என்று இரங்கினராம். வள்ளலாதீனத்து வந்தார் கைகளிற் குறிகளையிட்டு அழிக்கும் வழக்கத்தைச் சுட்டிக்காட்டி இக் கதை மெய்ம்மையேயென்று நிறுத்த முயலுவாரு முண்டு. விபூதியை யழித்தவர் மெய்கண்டதேவரா யிருந்ததனுல் வள்ளலதீனத்தார் செய்கைக்கு அது காரணமாதல் எப்படி? மெய்கண்டதேவர் வள்ளலாதீனத்துக்கு மூலபுருஷரா? கண்ணுடைய வள்ளலார் காலம் பதினைந்தாம் நூற்றுண்டென்று ஏற்படுதலின் பதின்மூன்ரும் நூற்ருண்டின் முற்பகுதியில் நிகழ்ந்த மெய்கண்ட தேவர்க்கும் அவர்க்கும் சம்பந்தங் கற்பித்தல் பொருந்தாது.

இனி, இவ்வாசிரியரைப் பற்றிச் சீகாழியில் வழங்கும் ஐதிகம் ஒன்று. அப் பதியில் ஒரு செல்வர் வீட்டில் செல்வப் பிள்ளையா யவதரித்து அக் காரணத்தினுல் சகல கலைஞானங்

களிலும் அபாரவிற்பத்தி யடையும் அவகாச முதலியன பெற்றிருந்த நமது வள்ளலார் தினந்தவருது திருக்கோயிலுக்குப் போவது வழக்கம். அப் பதியிலேயே அவதரித்துச் சிவபெருமானது செல்வக் குமாரரென விளங்கிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரது அருட்சரிதங்களைக் கேட்டல் மாத்திரையேயன்றி அவற்றுட் பெரும் பான்மையும் நிகழ்ந்த ஸ்தலத்தில் தாமும் தங்கும் பெரும்பேறு பெற்றமையால், வள்ளலார் பிள்ளையாரிடத்துப் பேரன்பு பூண்டு அவரையே தமக்கு ஆசாரியராகக்கொண்டு உபாஸித்து வந்தார். உபாஸனையின் பலனாக ஞானம் தம் மனத்துள் உதித்த காலந் தொட்டு வள்ளலார் பிரதிதினமும் கோயிலுக்குப் போய்த் திரும்பித் துயின்றெழுந்து ஒரு வெண்பாச் செய்து வந்தார். கோயிலில் நெடுநேரம்போக்கி மீளுதல் இவர்க்கு இயல்பாகலின் இவர்க்கு வழிகாட்டியாகக் கந்தன் என்னும் வேலைக்காரன் தீவர்த்தியோடு உடன்செல்வது வழக்கமாயிருந்தது. இருநூற்றைம்பத்துமூன்றும் வெண்பாவிற்குரிய தினத்தில் நெடுநேரமாயும் வள்ளலார் வீட்டிற்குத் திரும்பினால்லர். மத்தியில் மின்னலும் இடியும் மழையும் மிகுந்து தெருக்களிலெல்லாம் வெள்ளம் ஓடத் தலைப்பட்டது. கந்தன் வீட்டிலேயே தங்கிவிட்டான். வள்ளலார் தரிசனம் முடிந்து கோயில் வாயிலை யணுகிக் கந்தா என்னலும் ஸ்ரீசுப்பிரமணிய மூர்த்தியே கந்தனுய் உருக்கொண்டு அவ்விடத்துத் தீவர்த்தியுங் கையுமாப் புகுந்து வழிவிட்டார். வீடு போய்ச் சேர்ந்ததும் பழைய கந்தன் மன்னிப்புக் கேட்டற்காக ஒடுங்கி முன்வந்து நின்றான். கூட வந்த கந்தனைத் திரும்பிப் பார்த்தவர் அவனைக் காணாராய்த் திகைத்தார். பின்னர் இஃது எமது ஞான சம்பந்தன் அருள்விளையாட்டே யாகுமெனத் துணிந்து அன்றிரவு வெண்பாப்பாடி நூலை முடித்து அதனைத் தம் அருகிருந்த பக்குவர்களிடத்து மனமுவந்து கொடுத்தனர்.

காலையில் எழுந்ததும் தம்பெருந்திரவிய மத்தனையும் அரைக் கணத்தில் வாரியிறைத்துத் துறவு மேற்கொண்டார்.

இஃதன்றி வேறொரு ஐதிகமும் வழங்கும். சீகாழி நகரில் ஏழைக் குடும்பமொன்றிற் பிறந்து பள்ளிக்கூடத்தி லோதுங்கும் பாக்கியந்தானு மின்றிக் கூலித்தொழில்செய்து வந்தவர் கண்ணுடைய வள்ளல்; பகல் முழுதும் கூடையை யெடுத்துக் கூலிவேலைசெய்து அற்பப்பொரு ளீட்டித் தம் காலந் தள்ளிவந்தவர். ஒருநாள் தற்செயலாய் ஒரு பணக் காரன் இவரைக் கூலியாளாக வருமாறு கூப்பிட்டான். இவ ரும் இசைந்து உடன் சென்று அவன் வாங்கிய பொருள் களை யெல்லாம் தம் கூடையில் நிரப்பி வைத்துக் கூடை யைத் தூக்கிக்கொண்டு அவன்பின்னே சென்றார். அவனும் வழியிலிருந்த ஆலயத்துள் தரிசன நிமித்தம் பிரவேசித் தான். இவரும் உடன் செல்லுதல் அவசியந்தானே. ஒவ் வொரு சந்நிதியிலும் ஒரு முறை கர்ப்பூராத்திரிகம் பணி மாறப் பண்ணினவன் திருஞான சம்பந்தர் சந்நிதியில் எஞ் சிய கர்ப்பூரத்தை இரண்டாம் முறை ஏற்றிவைத்தான். உடனே கூலிக்கார வள்ளல் இம் மூர்த்தியே பெரிய சாமி யென்று நிச்சயித்தார். பின் அப் பணக்காரனோடு அவன் வீடு சேரும்வரை உடன் சென்று அவன் சரக்குகளை யொப்பித்து விட்டு அவன் கொடுத்த கூலியாகிய இரண்டு பணத்தையும் கூடைக்கு ளேற்று வாசற்படி தாண்டியதும் கூடையை இரண்டு பணத்தோடு வீதியிற் சுழற்றி யெறிந்தார். இவ ரைப் பார்த்திருந்த ஜனங்கள் இவன் பிழைக்க வகை யறி யான் பித்தேறினன் என்றனர். விரத்திமிக்க வள்ளல் நேரே கோவிலுட் புகுந்து பெரியசாமி சந்நிதியில் நின்றார். நின்ற வர் மூன்று நாள்வரை அவ்விடம் விட்டுப் பெயரவில்லை. இர விற் கோவிற் கதவு மூடுஞ் சமயம் எங்காயினும் ஒளித்தி ருந்து கோவிலார் புறம் போந்ததும் தங் கடவுளிடம் வந்து

சேருவர். மூன்றும்நா ளிரவில் கடவுள் வள்ளலார்கனவிற் போந்து, 'உன்னுடைய பக்தியாற் பிரசன்னமாயினேம். வேண்டியதைக் கேட்டு அடைக' என்றனர். இவர் 'யான் ஒன்றும் அறியேன். எல்லாம் உன் பரம்' என்றனர். அதன் பின் ஞானசம்பந்தரே இவருக்குச் சகல ஞானத்தையும் உப தேசித்து இச் சாத்திரத்தை எழுதுமாறு செய்தனர். ஞான சம்பந்தரே இவருக்கு உபதேசகுரு என்பது பலபாட்டுக் களினும் ஆசிரியர் கூறுமாற்றான் அறியப்படும். உதாரண மாக,

> கின்னரியைத் தொட்டவர்போற் கேட்டவள வுக்களவு
> சொன்னதல வெங்கள் சுவாமியுரை—மன்னடத்தி
> லானந்த மூர்ச்சிதர்கை யாடகயாழ் தன்னிலே
> தானுாலம் போலமொழிந் தான்.

என்னும் வெண்பாவை நோக்குக. வெண்பாக்கள் அமைந் திருக்கும் தன்மையும் பல வழக்குச் சொற்கள் விரவியிருத்த லும் ஆசிரியர் இலக்கண இலக்கியப் பயிற்சி வான்முறையாக அடைந்தவ ரல்லர் போலுமென ஊகித்தற் கிடந்தரும். மற்று, வள்ளலார் அதிகைக் கதிபரெனப் படுதலால் செல்வ மல்கிய குலமொன்றி லுதித்தவராதல் வேண்டும். அவர் ஏழையாகக் கூலிவேலை செய்து பிழைத்தார் என்பது எவ் வாற்றானும் பொருந்தாது.

இனி, ஒழிவிலொடுக்கம் ஓதியுணர்ந்து அடங்குதற்குக் கருவியாயுள்ள நூல்.

> சும்மா திருக்கவைத்த சூத்திரமாஞ் சாத்திரத்தை
> விம்மா கதறுவதும் வேலைகளுந்—தம்மறிவா
> னீட்டிப் பிடித்திருக்கு நிட்டைகளு ஞானிகண்முன்
> காட்டும் பரியாச கம்.

இந்நூல் பொதுவி லுபதேசம், சத்திநிபாதத் துத்தம ரொழிவு,யோகக் கழற்றி,கிரியைக் கழற்றி, சரியைக் கழற்றி,

விரத்தி விளக்கம், துறவு, அருளவத்தைத் தன்மை, வாதனை மாண்டார் தன்மை, நிலையியல்பு என்னும் பத்து அதிகாரங்கள் கொண்டது. பொதுவிலுபதேசம் ஆசாரியர் அனுசாரியரிலக் கண முதலியவற்றையும், நூலுட் கூறிய கருத்தெல்லாவற் றையும் தொகுத்துப் பொதுவான் உபதேசமாகக் கூறிற்று.

சத்தாதி தத்துவம்போய்த் தானுமெதி ருங்கழன்றாற்
சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலே—முத்தி
யசிர்வசன மின்ப வதீதமெனி லாங்கே
பினமிடுதல் கன்மம் பிளாய்.

என்ற வெண்பாவில் ஆசிரியர் சித்தாந்தம் வேதாந்தமென்று பேதம் பாராட்டுவதெல்லாம் கீழ்ப்பட்ட நிலையிற்றான் என்று விளக்கினர். சத்திநிபாதத் துத்தமரொழிவு நால்வகைச் சத்திநிபாதத்து உத்தமர்களது பிரபஞ்சப் பற்றொழிவை முறையே கூறிற்று. யோகக் கழற்றி கிரியைக் கழற்றி சரி யைக் கழற்றி முதலிய மூன்றும் ஞானத்திற்குப் பக்குவராய் வந்தவர்கட்குத் தற்போதத்தை யொழித்து ஞானம் வருவித் தற் பொருட்டு அத் தற்போதத்தாற் செய்யும் சரியாதிகளைப் போதனைகளால் நீக்குமாற்றைக் கூறின. விரத்திவிளக்கம் உட்டுறவின் இலக்கணம் அறிவித்தது. துறவு புறத்துறவின் இலக்கணத்தை யுரைத்தது. அருளவத்தைத் தன்மை ஆறாறு தத்துவத்தைக் கடந்து ஆணவ இருளையும் கடந்து ஆன்ம தரிசனம் முதலிய சுத்தாவத்தையில் நிற்போரது தன்மை கூறிற்று. வாதனைமாண்டார் தன்மை குடும்பத்தோடு கூடியிருந்தும் ஞானம்பெற்று அக்குடும்ப வாதனை மாண்டு நின்றார் தன்மையுரைத்தது. நிலையியல்பு உண்மைநிலை தவறி னும் மீட்டும் அதனைச் சென்றடைதற் குபாயம் கூறியது.

ஒழிவிலொடுக்கத்தி லுள்ள உண்மைகளையும் நயங்களை யும் இவ்வாறு அதிகார விளக்கங் கூறுதலானும், ஆங்காங்கே

சில வெண்பாக்களை யெடுத்துக் காட்டுதலானும் சொல்லி முடித்துவிட்டதாக நினைக்கலாகாது. வெண்பாத்தோறும் உண்மையுண்டு, பதந்தோறும் நயமுண்டு. அவற்றை முறையாக உரையின் துணைகொண்டே படித்தறியத்தகும்.

கண்ணுடைய வள்ளலார் அருளிச்செய்த நூல்கள் ஒழிவிலொடுக்கத்தையன்றி வேறு பல உள. மாயாப்ரலாபம் எண்பத்தொரு வெண்பாக்களாலாய நூல். இது நான்கு முறை பதிப்பிக்கப்பட்டுளது. நான்காம் முறை செந்தமிழ்ச் செல்வி வாயிலாகக் கி. பி. 1933-ல் வெளிவந்தது.

ஈரே ழுலகி லெண்ணீங் குயிர்க்கும்
பேரா வறிவாய்ப் பிரிவற நிறைந்து
காயா திகளாய்த் தனுவொடு கலந்து
மாயா ளென்னும் பேருடை மடந்தை
மழைக்கா லிருளை வெளியென மயக்கித்
தழைத்தபல் லுயிர்க்கிரு டானாய் நிற்பவள்
அன்னை யிருண்மலி யாணவ மாகவும்
முன்னவள் திரோத மொய்குழ லாகவும்
நல்லுயி ரிச்சா ஞானங் கிரியை
தொல்லிரு வினைகளைத் தோழிய ராகவும்
சுத்த மாயையைக் கைத்தா யாகவும்
புத்திரர் பொறிபுலன் கரண மாகவும்
போதன் றன்னைப் புருட னாகவும்
தீதற வுடைய மோகினித் தெரிவை
ஈங்கிவ ளொருவன் றன்னு லின்புறு
பாங்குடைப் போதனைப் பறிகொடுத் தழிந்து
போதன் போதையைப் பொருந்துதல் கண்டு
போதமின் மாயாள் புலம்பல் தன்னைச்
சாயா வுண்மைத் தபோதனர் கேட்க
மாயாப்ர லாப மெனவகுத் துரைத்தோன்

கெடிலப் புனல்சூ ழதிகைக் கதிபன் . . .
பெருமைய ரடிபுனை பெற்றி யோனே.

என்னுஞ் சிறப்புப்பாயிரம் மாயையாம் மாது போதனை யிழந்து புலம்புதலே நூல் நுதலிய பொருளென விளக்கிற்று. காப்புச்செய்யுள் விநாயகப்பெருமான் வணக்கம்.

காயா நிகள்கழியக் காதலித்த மாதவர்க்கு
மாயாப்ர லாப மெனவகுத்துத்—தூயபுகழ்ச்
சண்பையில்வாழ் சம்பந்தன் தாள்வணங்கிச் சாற்றுவே
னெண்பதுவெண் பாவாக யான்.

என்னும் குருவணக்கம் திருஞானசம்பந்தப் பெருமான் மேலது. நூலின் இறுதிச்செய்யுளுக்கு முந்திய செய்யுளும் அப் பெருமான் வள்ளன்மையை வியந்தது.

சொல்லுரிமைத் தூய்மையிலா நானுந் துணிபொருடான்
வல்லவர்கள் போனூல் வகுத்திடுதல்—அல்லலற
இப்பாரிற் றோன்று மிரவியெதிர் மின்மினியின்
றொப்பாக மின்னுவபோ லும்.

என்னும் இந் நூல் அவையடக்கச் செய்யுளையும்,

வணங்கா வுரைக்கு வணக்கமிலை தீங்கை
வணங்கிவாழ்த் தென்னில் வளமியா—வணங்குகினும்
எல்லார்க்கு நன்று மிருப்பதிலை யாதொன்றும்
எல்லார்க்கும் பொல்லா திலை.

என்னும் ஒழிவிலொடுக்க அவையடக்கச் செய்யுளையும் ஒப்பு நோக்குக.

பஞ்சாக்கரமாலை காப்பு உள்பட அறுபது வெண்பாக்களா லாயது. தூலபஞ்சாக்கரம், சூக்குமபஞ்சாக்கரம், சீவன் முத்தர் ஞானபூசைக்கிரமம் என்று மூன்று பிரிவினை யுடையது. இந் நூலில் காப்புச் செய்யுள் விநாயக வணக்கமாம்.

கல்லேன் பிறநூல்கள் காழியர்கோன் பாடலல்லாற்
சொல்லேன் சுரரைத் தொழவினையேன்—நல்லசிறு

> செஞ்சதங்கை கொஞ்சுதண்டைச் சிற்றடிக்கன் பாகவெழுத்
> தஞ்சதங்கை யாமலக மாம்

என்பது குருதுதி. இதனை இலக்கணவிளக்க ஆசிரியர் பரம்பரை திருவாரூர் சோமசுந்தர தேசிகர் சைவசித்தாந்த மகா சமாஜத்தின் பதிப்பாக 1932-ல் பழைய பொழிப்புரையுடன் வெளியிட்டனர்.

ஞானசாரம் நூற்றென்பது விருத்தங்களா லானது. இதற்குக் காப்புச் செய்யுள் உண்டு; அம்பலத்தாடுவார்க்கும், ஞானநாயகிக்கும், திருஞான சம்பந்தர் முதலிய நால்வர் சமயகுரவர்க்கும், தொண்டரனைவர்க்கும் வணக்கம் சொல்லப் பட்டுளது. இது இன்னும் அச்சாகவில்லை. இது நுதலிய பொருள்

> மிக்கவே தாந்த சைவ மெய்ப்பொருட் பயனும் மூவர்
> தொக்கசெந் தமிழ்சேர் வாய்மைச் சுருக்கமாய் வாத வூர
> ருக்குநின் றோது முண்மைக் குரியதா லிந்த நூற்குத்
> தக்கபே ருரைக்கின் ஞான சாரமாம் பெயர தாமே.

> பொய்வகைச் சாறு வாகன் புகழ்சிவாத் துவிதி யீரு
> முய்பொரு ளிதுவென் றெண்ணி யின்றள வுணர வொண்ணு
> மெய்தரு பொருளா யின்ப வீட்டில்வே தாந்த மான
> சைவவத் துவிதந் தன்னைத் தமிழினுற் சாற்ற லுற்றும்.

என்னும் பாயிரச் செய்யுள்களால் விளங்குகின்றது.

பஞ்சமலக் கழற்றி ஐந்து வெண்பாக்களா லாயது. திருஞானசம்பந்தரை முன்னிலைப்படுத்தி ஐந்து மலங்களும் கழலுமாற்றை யுரைப்பது.

நியதிப்பயன் நூற்றுமூன்று விருத்தங்களால் வடமொழியிலுள்ள குகபத்ததியின் சாரமாக ஆசிரியர் தமது கண்ணுடைய பரமாசாரிய மூர்த்தியாகிய திருஞானசம்பந்த வள்ளற் பெருமானை முன்னிலைப்படுத்திக் கி. பி. 1450-ல் இயற்றி யருளியது. இது காழி வித்துவச்சிகாமணி ப. அ. முத்துத்

தாண்டவராய பிள்ளை யவர்களால் கி. பி. 1932-ல் வெளி யிடப்பட்டது.

சிவானந்தமாலை நானூற்றுப் பதினொன்கு வெண்பாக்களா லாயது. இதில் நான்கு வெண்பாக்கள் திருஞானசம்பந்தர் வணக்கமா யமைந்தன.

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமெஞ் சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு—முற்கோலி
வந்திலரே னீறெங்கே மாமறைநூ லெனெங்கே
யெந்தைபிரா னஞ்செழுத் தெங்கே.

என்ற வெண்பாவைத் தன்னகத்துக் கொண்டது ; சைவசித் தாந்த வுண்மைகளைத் தெளிவாக உரைப்பது. இந்நூல் கி. பி. 1910-ல் முதலாக என்னால் வெளியிடப்பட்டது. வெளிப் பட்டபின் அகப்பட்ட எட்டுச் சுவடிகள் பல. இது திருத் தங்களோடு மீண்டும் வெளியிடத்தக்க நூல். கையெழுத் துப் பிரதிகளில் ஆசிரியர் பெயர் காணப்படவில்லை யென்பது இங்குக் குறிக்கற்பாலது.

தத்துவவிளக்கம் ஐம்பத்தொரு கலித்துறைகளா லாயது. இதனைக் கி. பி. 1918-ல் தாம் இயற்றிய உரையோடு பதிப் பித்த ஸ்ரீகாசிவாசி செந்தினாதையர் இதன் ஆசிரியர் திரு ஞானசம்பந்தமூர்த்தி நாயனாரது நன்மாமனாராகிய சம்பந்த சரணாலயர் என்றெழுதி வைத்தனர். அவர்க்குக் கிடைத்த திருநெல்வேலிப் பால்வண்ண முதலியார் பிரதியிலும் சூரிய னார்கோயிலாதீனத்துப் பிரதியிலும் ஆசிரியர் பெயர் குறிக்கப் பட்டிருந்ததோ என்று தெரிந்துகொள்ளக் கூடவில்லை ; இந் நூலில் ஞானாசாரியர் துதி திருஞானசம்பந்தப் பெருமான் துதியே ; இதனையும் சிவானந்தமாலையையும் காழிக் கண்ணு டையவள்ளல் நூலென்று கொள்ளும் பிள்ளையவர்களுக்குத் தக்க ஆதாரமிருத்தல்வேண்டும். திருநெறி விளக்கம், பிராசாத விருத்தம் என்பனவும் அவ்வாசிரியர் இயற்றியருளியதாக

அவர்களே நியதிப்பயன் முகவுரையிற் காட்டியிருக்கின்றனர். அவற்றின் பிரதிகள் எனக்கு அகப்பட்டில. இங்குப் பெயராற் குறித்த நூல்களனைத்தும் ஒழிவிலொடுக்கவாசிரியர் தாமே யியற்றியனவோ அவர் வழி வந்து அப் பெயரைத் தாங்கிய வேறு பெரியார் ஒருவரோ பலரோ இயற்றியனவோ என்பது நன்கு ஆராயற்பாலது.

ஒழிவிலொடுக்கத்தினை நன்குணர்ந்து அதிற் சொல்லிய அனுபவங்களைத் தமவாக்கிக்கொண்ட பெரியார்கள் பலர் இங்கிருப்பர். அன்னார் யான்சொல்லிய அனைத்தையும் ஆமோதிப்பர். இந் நூலினை நன்குணர்ந்திலாதார்க்கும் இதனைப்பற்றிக் கேள்வியுற்றது மாத்திரமேயன்றி ஓதி யறியாதார்க்கும் இதனைக் கற்றுணர்தற்கண் ஊக்கமுண்டாகுமாயின் அதுவே யான் நூலைப்பற்றியும் அதன் ஆசிரியரைப் பற்றியும் இவ்வளவுங் கூறியதற்குத் தக்க பயனாகும்.

# புகலிவேந்தர் புனிதமொழி*

[ஈ. த. இராஜேசுவரி அம்மாள், எம். ஏ., எல். டி.]

இன்று எடுத்துக்கொண்ட விஷயம் புகலிவேந்தர் புனிதமொழி. அதாவது திருஞானசம்பந்தரின் பரிசுத்தமான தமிழ்மொழி என்பது பொருள். இவர் தமிழ் மொழியைப் பற்றியாது கூற வேண்டுமோ, அது சுருதியால் வெளிப்பட்டும், யுக்திக்குப் பொருந்தியதாயும், அனுபவத்தில் காணக்கூடியதாயும் உளதென்பது திண்ணம். நமக்குச் சுருதியாய் இருப்பன தமிழ்மறைகளான தேவாரம். அவற்றுள் புகலி வேந்தர் பாடிய திருமுறைகளில் திருக்கடைக்காப்பாய் நிற்

*இது சமாஜவிசேஷ மகாநாட்டில் திரு. அம்மையார் நிகழ்த்திய சொற்பொழிவின் குறிப்பு.

கும் பல செய்யுள்களில் தன்மொழி புனிதத்தமிழென்று பற்பல பதிகங்களில் வற்புறுத்தியும் கூறியுள்ளார். நமது சமய அபிமானத்தை மறந்து இவ்வாறு தற்புகழ்ச்சியாய்க் கூறுகின்ருரோ என்று நாம் எண்ணினும், தன்னுடையாற்றல் உணராத மன்பதைகளுக்கு அவ்வாறு தற்புகழ்ச்சியாய்க் கூறினும் அவருக்குத்தகும். ஆனல் அவ்வாறு தற்புகழ்ச்சியாய் மொழிந்தனரென்று கொள்ள அவர் திருஉள்ளம் வைக்கவில்லையென்றும் வேறு சில கருத்தால் அவ்வாறு கூறினரென்பதும் பின்னர் காண்போமாக.

இங்கு தமிழ் மறையில் முதலாவதாக எடுக்கப்பட்ட இச்சமய குரவரின் மொழியாலேயும் முதல் மூன்று திருமுறைகள் மிக்க புனிதமொழி யென்பது ஏனைய சமயகுரவர்களின் கூற்ருலும் விளங்கும். இவர் பாடிய பதிகங்கள் இயற்றமிழ் வகையில் சிறந்த இயற்றமிழ் என்பது திருநாவுக்கரசராலும், இசைத்தமிழ் வகையில் சிறந்த இசைத்தமிழ் என்பது வன்ருெண்டராலும் நிரூபிக்கலாம் (முறையே ஐந்தாம் திருமுறையிலும், ஏழாந்திருமுறையிலுங் காணலாம்.) திருநாவுக்கரசு திருவாய்மூருக்குச் சிவபெருமானை பின்தொடர்ந்து சென்று அங்கு பாடிய பதிகத்தில் புகலிவேந்தர் தமிழைப் பற்றி பின்வருமாறு கூறுகின்ருர் :—

"திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடியடைப் பித்தாருந் நின்ருர்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கோள் செஞ்சடை யாரிவர் பித்தரே."

மொழியின் சக்தியால் கோயில் கதவை ஆடவைத்தல் சாமானியமான செய்கையன்று. தேகசக்தி முழுவதையும் மனதின் வழியாகச் செல்லவைத்து கண்ணுற்ற ஜடப் பொருளை ஸ்தூல யந்திரம்போல் அசைவித்தல் இன்றும் செய்யக்கூடிய காரியமாயினும் மனேவாக்குக் காயம் பரிசுத்த

மில்லாதோன் செய்யக்கூடாத காரியமாகும். எனவே தனது வாக்கு பரிசுத்தமாயிருப்பினும் திருமறைக்காடு திருக்குறுந் தொகை பதிகம் முழுவதும் அப்பர் பாடும் வரையில் கதவு திறக்கப்படவில்லை. அவர் திருக்கடைக்காப்பு செய்யுளில் அரக்கனுக்கு அருள்வைத்த உமக்கு என்பேரில் இரக்க மில்லையா என்று சிவபெருமானிடத்தில் ஓலமிட்டுப் பாடிய பிறகே திருமறைக்காட்டின் கோபுரவாசற் கதவுகள் திறக்கப் பட்டன. இக்கருத்தையே மேற்கண்ட திருவாய்மூர் திருப் பதிகத்திலும் அமைத்துப் பாடினர். இவர் திறக்கப்பாடியது பதிகம் முற்றும் பாடிய பின்னரென்றால் திருஞானசம்பந்தர் பதிகம் ஆரம்பித்தபோதே கதவு அடைக்கப்பட்டது இவற் றின் தராதரம் உணர்த்துவான் அப்பர் :—

"திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடியடைப் பித்தாருந் நின்றார்."

இதில் "உறைப்பு" என்பதில் வல்லினறகரம் வருவது காண்க. உறைப்பு=தாக்குதல். இதில் "உந்நின்றார் என் பதில் நகரம் கவனிக்க.

"உ+நின்றார் உந்நின்றார்".

[விதி:— "எகாவினுமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகாமும் மெய்தில் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகாமுந் தோன்றுதனெறியே."
(நன்னூல் - 163-ம் சூத்திரம்.)]

பிறவரின் அவையும் என்றதால் நகரம் சந்தியிற்றோன் றியது "உ" என்கின்ற சுட்டு அப்பர் எதிரில் நின்றிருந்த திருஞானசம்பந்தரைக் காட்டும். ஆகையால் அப்பர் கூற்றின் வண்ணம் புகலிவேந்தர் தமிழ் சிறந்த செந்தமிழ் என்றும் அது உறைப்பாய் தாக்கக்கூடிய சக்தி உடையதென்றும் அச் சக்தி ஜடஉலகத்தில் காணற்கரிய அற்புதங்களைச் செய்ய

வல்லதென்றும் கூற ஒரு சான்றாய் நிற்கும். சம்பந்தர் பாட்டின் உறைப்பு சமணர் கொளுத்திய தீயைப் பாண்டியனிடம் பையச்செல்ல வைத்ததும், பிறகு வெப்பு நோயைத் தீர்த்ததும், நீரோட்டத்தை எதிர் நோக்கி ஓலையைச் செல்ல வைத்ததும், முயலகனைத் தீர்த்ததும், வெந்த அங்கத்தைப் பூம் பாவை யாக்கினதும், அப்பர் திருவாக்கினின்று அக்காலத்திலேயே எதிர் பார்க்கக்கூடியவாயின.

இனி நம்பியாரூரர், புகலிவேந்தர் புனிதமொழியைப் பற்றியாது கூறுகின்றாரென்று காண்போம்:—

“ நல்லிசை ஞானசம்பந்தனு நாவுக்
 காசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி யேத்துகப் பானைத்
 தொண்டனே னறியாமை யறிந்து
கல்வியென் மனத்தைக் கசிவித்துக்
 கழலடி காட்டி யென்களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்க நின்றானை
 வலிவலந்தனில் வந்து கண்டேனே”.

(சுந்தரர் - திருவலிவலம்.)

என இசைஞானி புதல்வர் சம்பந்தர் இசையைப்பற்றிப்பாடினர். ஆதலால் சம்பந்தர் இசைத்தமிழினும் சிறந்த இசைத்தமிழ் இல்லை என்பது வெளிப்படை. இதை ஆராயப் புகுவோமாயின் ஏன் சம்பந்தர் இசை மேலான இசைஎனின், சிவபெருமானுடைய சோதியானது அவரைச் சுற்றி யெங்கும் நிறைந்திருந்தது. அவர் போகுமிடமெல்லாம் அது அவரைத் தொடர்ந்தே சென்றது. இதற்குச் சான்று அவர் புனிதமொழியேயாம்:—

“ குற்றம் நீ குணங்கள் நீ கூடல் ஆலவாயிலாய்
 சுற்றம் நீ பிரானும் நீ தொடர்ந்திலங்கு சோதி நீ

கற்றநூற் கருத்து நீ யருத்த மின்ப மென்றிவை
முற்றும் நீ புகழ்ந்து முன் உரைப்பதென் முகம்மனே.''
(சம்பந்தர் - திருஆலவாய்.)

இவ்வாறு தன்னைத் தொடர்ந்திலங்கும் சோதியை நூலும் பொருளுமாய் அனுபவித்து அடைந்த இன்பத்தை மனதில் அடைத்து வைக்கமுடியாமல் ஆனந்த வெள்ளம் பொங்கித்ததும்பி ஓடுதலே சம்பந்தர் பதிகமாம். இதைத் திருத்துருத்திப் பதிகத்தில் காண்க.

'' களங்குளிர்ந்திலங்கு போது காதலானும் மாலுமாய்
வளங்கினம் பொனங்கழல் வணங்கி வந்து காண்கிலார்
துளங்கிளம் பிறைச் சென்னித் துருத்தியாய் திருந்தடி
உளங்குளிர்ந்த போதெலாம் உகந்துகந் துரைப்பனே'':

தன் உளங் குளிர்ந்த போதெலாம் உகந்து உகந்து உரைத்தலே சம்பந்தர் தொழிலாயிருந்தது. ஆதலால், அவர் இசையானது சுயமாய்ப் பிறந்த இசை. பிறரிடம் கற்றதன்று; வழங்கிவந்த இசையைச் சீர்திருத்தும் இசை. யாழ் மூரிப்போல் நூதனப் பண்களை உண்டாக்கியஇசை. இவற்றையெல்லாம் எண்ணியே சுந்தரர் 'நல்லிசை ஞானசம்பந்தர்,' என்றனர். நமக்கு இரண்டு நூற்றுண்டுகளுக்கு முன்னிருந்த தாயுமானவரும் :—

'' அன்றுமுதல் இன்றைவரைச் சனனகோடி
அடைந்தடைதிங் கியாதனையால் அழிந்ததல்லால்
இன்றைவரை முத்தியின்றே யெடுத்த தேகம்
எப்போதோ தெரியாதே யிப்போதே தான்
துன்று மனக் கவலை கெடப் புலைநாயேனைத்
தொழும்புகொளச் சீகாழித் துரையே! தூது
சென்றிடவே பொருளை வைத்த நாவலோய்!நஞ்
சிவனப்பா என்றஅருட் செல்வத் தேவே-''

என்னும் செய்யுளில் ''துன்று மனக்கவலை கெடப் புலைநாயே

ணைத் தொழும்பு கொளச் சீகாழித் துறையே" என்றார் எனவே சம்பந்தர் தேவாரத்தைப் பாடும்போது எல்லாக் கவலைகளும் விலகிப் போகின்றன. அவர் செய்யுளின் இசையும், நயமும் பன்னீரைத் தெளித்து மயில் விசிறியால் விசிறுவதுபோல் இன்பம் கொடுத்துக் கொண்டே மனதைச் சீர்திருத்துகிறதே யல்லாது, ஊசிபோல் குத்தி நெருப்புபோல் காய்ச்சி உருக்கும் தொழில் உள்ளது அல்ல. கடூரச் சுபாவம், அவ்வாறு காட்டாமலே இனிய நடையில்,

"வம்மின்னடியீர் நாண்மலரிட்டுத் தொழுதுய்ய
உம்மன்பினொ டெம்மன்பு செய்தீசன் உறைகோயில்."

(சம்பந்தர் - திருவீழிமிழலை.

என்று நம்முடைய கையைப் பிடித்து ஈசன் சன்னிதானத்தில் நிறுத்தும். இதையே தாயுமானவர்:—

"வெம்பந்தர் தீர்த்தலகாள் வேந்தன் திருஞான
சம்பந் தனையருளாற் சாருநாள் எந்நாளோ."

என்று அடியார் வணக்கத்தில் முறையிடுவார். கூன் பாண்டியன் காலத்திலிருந்து ஜார்ஜ் மன்னவர் காலம் வரையிலிருந்த புலவர் எவரும் சம்பந்தரைப் புகழாம லிருந்ததில்லை. ஆதலால் சுருதி முறையில் நாம் நோக்கும்போது திருஞான சம்பந்தர் தமிழ், பரிசுத்தமான தமிழ்மொழி என்று விளங்கும்.

(தொடரும்)

---

## பெரியார் பிரிவு

நமது சமாஜ ஆயுள் அங்கத்தவரும், சென்னை ஹிந்து சமயப் பாதுகாப்புக்கழகக் காரியதரிசியும், சிறந்த அன்பருமான சைவத்திருவாளர் - சி. எஸ். சுவாமிநாத முதலியார், பி. ஏ. அவர்கள் 5-10-34-ல் சிவபத மெய்திய செய்தியை மிக்க வருத்தத்தோடு அறிவிக்கிறோம். நமது பிரிவாற்றாமை யுணர்ச்சியை இதன் மூலம் தெரிவிக்கிறோம்.